ஸ்ரீகுருப்யோ நம:

# ஸ்ரீஸதாசிவேந்திரர்

## வரலாற்றுச் சுருக்கம்

[ பேராசிரியர் சிருங்ககிரி ஆஸ்தான மகாவித்வான்
ஆங்கரை வி. எஸ். ராமச்சந்திர சாஸ்திரிகள், காசி. ]

உபநிஷத்துக்களிலும் அதைப் பின்தொடர்ந்த ஸ்மிருதிகளிலும் ஞானிகள் இலக்கணம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. கேட்ட அளவில் இராது நேர்முகமாகப் பார்த்தும் அவ்விலக்கணத்தை, ஐயமற ஸ்திரப்படுத்திக்கொண்டு, நம்மனோர் கிருதகிருத்யர்களாக, பல மஹான்கள் இவ்வுலகில் தோன்றினர். சுமார் இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன் தோன்றிய, இத்தகைய மஹான்களுள், ஸ்ரீ ஸதாசிவேந்திரர் அக்கிராசனத்தை வஹிக்கும் மேன்மை தங்கியவர்.

சொக்கநாதரின் திருவிளையாடல்களுக்கு இடமான மதுரை இவர் பிறப்பிடம். ஆந்திரர் என்று கூறப்படும் தெலுங்குப் பிராமண குலத்தில் உதித்தார். சிவராமகிருஷ்ணன் என்று நாமகரணம் செய்யப்பட்டார். தகுந்த வயதில் உபநயனமும் நடந்தது. குருகுலம் சென்று வேத வேதாங்கங்களையும், சாஸ்திரங்களையும், கசடறக் கற்று உணர்ந்தார். ஸத்குலத்தில் தோன்றிய கன்னியுடன், திருமணமும் நிறைவேறியது. கன்னி, மங்கைப் பருவமடைய, அதையொட்டின உத்ஸவங்களை, சிவராமகிருஷ்ணனின் தாய் நடத்தலானாள். நித்தியப்படிபோல் அல்லாது அன்று பல காரணங்களால் மத்தியான்ன உணவு அருந்துவதில் காலதாமதம் ஏற்பட்டது. பசியுற்ற சிவராமகிருஷ்ணன் தாய் பல சொல்லியும் கேட்கவில்லை. 'இல்லறம் ஆரம்பிக்கும் முன்னமே இத்திண்டாட்டம் ஆனால், இல்லறம் நடத்துங்கால், எத்தகைய துன்பங்களுக்குத் தான் இலக்காக வேண்டுமோ?' என்ற எண்ணம், சிவராமகிருஷ்ணன் உள்ளத்தில் உதித்தது. உடனே துறவறம் பூண நிச்சயித்தார். கணக்கற்ற முந்திய ஜன்மங்களில் செய்த, நிஷ்காம கர்மம், மற்றும், பக்தி இவற்றின் மேலீட்டால் மிகவும் தூய மனம் இவருக்கு வாய்த்திருந்தது. துறவறம் கொள்ள ஏதாவது ஒரு நிமித்தம் போதும். நன்கு உலர்ந்த வைக்கோல் போர் பற்றி எரிய, ஒரு தீப்பொறி போதாதா? அரசிளங்குமரனை சித்தார்த்தன் செல்லும் வழியில், ஒரு பிணத்தைப் பார்த்த மாத்திரத்தில், வைராக்யம் அடைந்து, துறவியாகித் தவம் புரிந்து, புத்தனாக வில்லையா?

வைராக்யம் உதிக்கவே,

"तद्विज्ञानार्थं सगुरुमेवाभिगच्छेत्"

என்ற முறைப்படி, பரமசிவேந்திரர் என்னும் குருவை நாடினன் சிவராமகிருஷ்ணன். குருவும் சீடனின் பக்குவத்தன்மையை உணர்ந்து, தத்துவத்தை உபதேசித்தார். ஸதாசிவேந்திரர் என்று யோக பட்டம் அளித்து அனுக்கிரஹித்தார். குருவின் பெயரைப் பரமசிவேந்திர ஸரஸ்வதி என்றும், சீடனின் பெயரை, ஸதாசிவேந்திர ஸரஸ்வதி என்றும் சிலர் கூறுவர். இது சரியல்ல. ஆத்மவித்யா விலாஸம் என்ற பிரசித்தமான கிரந்தத்தில்

परमशिवेन्द्र श्रीगुरुशिष्येणेत्थं सदाशिवेन्द्रेण ।

रचितेयमात्मविद्याविलासनाम्नी कृतिः पूर्णा ॥

தம் பெயரை ஸதாசிவேந்திரர் என்றும், தம் குருவின் பெயரைப் பரமசிவேந்திரர் என்றும், ஸ்பஷ்டமாகக் கூறுகிறார். இக்கிரந்தத்தின் ஆரம்பத்திலும்,

" परमशिवेन्द्रार्यपादुकां नौमि "

" श्रीगुरुपरमशिवेन्द्रादेशवशोद्भूतदिव्यमहिमाहम् "

என்று குறித்திருக்கிறார். நவமணிமாலா இவர் இயற்றிய, மற்றொரு கிரந்தம். ஆங்கும், பரமசிவேந்திரன் என்றே

" परमशिवेन्द्रं भजेहमश्रान्तं "

குருவின் பெயரைத் தெரிவித்திருக்கிறார். இதேபோல்,

" श्रीमत्परमशिवेन्द्रं श्रीदेशिकानां वयं मुदा "

மற்றோர் இடத்தில், கண்டிருக்கிறார். சித்தாந்த கல்பவல்லியில்

" तमहं परमशिवेन्द्रं वन्देगुरूमखिल तन्त्र जीवातुम् "

என்று ஆரம்பத்திலும்

" इत्थं परमशिवेन्द्रानुग्रहभाजन सदाशिवेन्द्रकृता "

என்று இறுதியிலும் கூறுகிறார். சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன், தக்ஷிணாம்னாய பீடமாகிய சிருங்ககிரி சங்கராச்சார்ய பீடத்தில் விளங்கிய. ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ம பாரதி ஸ்வாமிகளும் தாம் அருளிச்செய்த ஸதாசிவேந்திர ஸ்துதியில்,

" परमशिवेन्द्रकरांबुज संभूतायप्रणम्रवरदाय ।

प्रणतिं कुर्मः सदाशिवेन्द्राय ॥ "

என்றே குறித்திருக்கிறார். ஸதாசிவேந்திரர் இயற்றிய நூல்கள் பல. அவைகளில் எங்கும் குருவின் பெயரைப் பரமசிவேந்திர ஸரஸ்வதீ என்றும், தம் பெயரை ஸதாசிவேந்திர ஸரஸ்வதீ என்றும், குறிப்பிடவில்லை. இது உண்மையாயிருக்க,

இவர் ஸந்நியாஸப் பெயர் ஸதாசிவேந்திர ஸரஸ்வதீ என்றும், இவர் குருவின் பெயர், பரமசிவேந்திர ஸரஸ்வதீ என்றும் கூறுவது மிகை.

கி. பி. 1711 முதல் 1729 வரை, தஞ்சையில், முதலாவது சரபோஜி மன்னன் ஆண்டான். அவன் ஆஸ்தான வித்வான் ஒருவர் எழுதிய கடிதத்தில், திபாம்பாபுரம் என்கிற கிராமத்தில்,

" सदाशिवब्रह्मरूपं ब्रह्माद्राक्षं चिरेप्सितम् "

ஸதாசிவேந்திரரை நேரில் கண்டதாகக் கூறுகிறார். புதுக்கோட்டை அரசனான, விஜயரகுநாதராயத் தொண்டைமான், இக்காலத்தில் விளங்கினான். இவன் ஸதாசிவேந்திரருடைய அனுக்கிரஹம் பெற்று மௌனியான ஸதாசிவேந்திரர் எழுதிய மந்திராக்ஷரங்களுள்ள மணலைச் சேகரித்துப் பேழையில் இருத்தி அன்று தொட்டு இதுகாறும் பூசித்து வருவதாகவும், ஸ்ரீவிஜய, என்னும் தெலுங்கு எழுத்துள்ள அம்மன் காசும், புதுக்கோட்டைச் சமஸ்தானத்தில் அது முதல் உபயோகிக்கப்பட்டு வருவதாகவும் தெரிகிறது. ஜன்மாந்தர பாக்கியத்தாலும், தீவிரமான முயற்சியாலும், ஸத்குருவினிடம் கற்றுணர்ந்து ஆத்மானந்தத்தை அநுபவித்தார். லோகானுக்கிரஹத்திற்காகச் சில கிரந்தங்களையும் செய்தார். இவரோ, இவர் குருவான பரமசிவேந்திரரோ எந்தப் பீடத்திலும் இருந்தவர் அல்ல. யாதொரு மடத்தின் சம்பந்தமும் அற்ற ஸந்நியாஸிகளின் பரம்பரையில் சேர்ந்தவர்கள்.

ஸ்ரீ ஸதாசிவேந்திரர்

" देशिकपरमशिवेन्द्रादेशवशोद्भूतदिव्यमहिमाहम् ।
परमशिवेन्द्रं वन्देगुरूमखिलतन्त्रजीवातम् ॥ "

என்று தெரிவித்திருப்பதால் ஸ்ரீ பரமசிவேந்திரரின் உபதேசத்தால்தான் இவருக்கு ஸகல சாஸ்த்திர ஞானமும் ஆத்ம ஞானமும் யோக சித்திகளும், ஏற்பட்டிருக்கவேண்டும். திருவிசை நல்லூர் என்னும் கிராமத்தில் ஸ்ரீ ராமசுப்பா சாஸ்திரிகளிடம் இவர் வேதாந்த சாஸ்திரம் கற்றதாகக் கூறுவாரும் உண்டு. இதுபற்றித் தக்க ஆதாரங்கள் தென்படவில்லை. ஸ்ரீஸதாசிவேந்திரரும் தம் கிரந்தங்களில் எங்கும் இவ்விஷயத்தைக் குறிப்பிடவில்லை.

பற்பல சித்திகளை இவர் பெற்றிருந்தார். இவைகளை, இவர் மதிக்கவில்லை. துரும்புக்கும் கடையாக எண்ணினார்.

" यदा न योगोपचितासु चेतो मायासु सिद्धस्य विषज्जते ब ।
अनन्यहेतुष्वथ मे गतिस्स्यादात्यन्तिकी यत्र न मृत्युहासः ॥"

என்று பாகவதம் சொல்லும் ஆத்மஞானம் பெற்றவன் வீடு, நாடு,

பலன், சித்திகள், இவை அதற்குப் பெருந்தடை என்று எண்ணு வான். ஆகாசகமனம் முதலாய சித்திகளில் மனம் ஈடுபடுமானல் மறை கூறிய “ निदित्यासनम् ” செய்வது எங்ஙனம்? ஒரு சித்தி யில் ஈடுபட்ட மனம் பல சித்திகளை அடைய ஆசைகொள்ளும். ஞானம் பெறும் வழி அடைபடும். இக்காரணத்தால் தத்வ ஞானத்தை விரும்பும் மகான்கள் ஸித்திகளை விரும்பார். ஞானி களுக்குத் தாமாக ஏற்பட்ட சித்திகள் இருக்கலாம். ஞானத் திற்கான யத்னங்கள் செய்யுமுன் சித்திகளைக் கோரி, செய்த தவம், மந்த்ர ஜபம் முதலானவைகளால் ஞானம் ஏற்பட்ட பின் னும் சித்திகள் ஏற்படலாம். ஞானிக்கு யோக ஸித்திகள் இருத் தல் வேண்டும் என்பதில்லை. வியாஸர் முதலானோர் ஞானம், யோகஸித்தி இரண்டும் உடையோர். ஜடபரதன் முதலான வர் ஞானம் மாத்திரம் உள்ளவர். ஞானிகள் யோக ஸித்தி களை இதராளுடைய பிரயோசனத்தின் பொருட்டு உபயோகிப்பி னும் தமக்காக உபயோகியார். ஸ்ரீஸதாசிவேந்தரர் தம் ஸித்தி களைப் பரோபகாரத்திற்காக உபயோகித்ததுண்டு. அவர் காட்டின லீலைகள் பல. தஞ்சை மன்னனுக்கு மக்களை அனுக்ர ஹித்தார். புதுக்கோட்டை அரசன் விஜய ரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஞானத்தை ஊட்டினார். கிராமத்தில் உள்ள குழந்தைகள் கோரிக்கைக்கு இணங்கிப் பல குழந்தைகளை மதுரை மாநகருக்கு அழைத்துச் சென்று சுந்தரேச்வரர் உத்ஸவத் தில் பவனி வருவதைக் காட்டிப் பக்ஷணங்கள் கொடுத்துப் பிறகு கண் மூடச்சொல்லி ஊர் சேர்ப்பித்தார். இம்மாதிரி ஆச்சரியம் உண்டுபண்ணும் ஸித்திகள் பல இவர்பற்றிக் கூறுவர். சிருங்க கிரி ஜகத்குரு ஸ்ரீஸச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ம பாரதி ஸ்வாமிகள் இயற்றிய सदाशिवेन्द्रस्तुति யில் சில சித்திகள் தெரி விக்கப்படுகின்றன.

ஸ்ரீஸதாசிவேந்திரர் இயற்றிய கிரந்தங்கள் பல:

ब्रह्मसूत्रवृत्तिः, योगसुधाकरः, सिद्धान्तकल्पवल्ली, केसरवल्ली, आत्मविद्याविलासः, सूतासंहितासारः,

முதலானவை அச்சில் இருக்கின்றன. லலிதமான நடையில் பற்பல உதாரணங்களுடன் ஸூக்ஷ்மமான விஷயங்களைத் தெளி வாகத் தெரியப்படுத்தக் கூடியவைகள் இவை. ஆத்ம வித்யா விலாஸம் ஸ்திதப்ரக்ஞனின் ஸ்திதியை விளக்கும். இக்கிரந் தத்தை உருப்போட்டு அர்த்தத்தை மனனம் செய்து தினம் சொல்லி வந்தால் வைராக்யம் ஏற்பட்டு ஞானவழியில் செல்லத் தானாக மனம் உத்ஸாகங் கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

---

|| श्रीः ||

# பிரம்ம ஸூத்திரவிருத்தி

[ ஸ்ரீபாஷ்யஸ்வாமிகள் ]

மகாதானபுரம்

विजननदी कुंजगृहे मंजुल·पुलिनैकमंजुतरतल्पे ।
शयनं कुर्वाणाय प्रणतिं कुर्मः सदाशिवेन्द्राय ॥

நமது பகவத்பாதாள் இயற்றிய பிரஸ்தானத்ரய பாஷ்யங்களில் மிகச் சிறந்தது பிரம்ம ஸூத்ரபாஷ்யம். ஏனென்றால் உபநிஷத், கீதை முதலியவைகளின் தாத்பர்யத்தைப் பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களுடன் விசாரணம் செய்து நிர்ணயிப்பது ஸூத்திர பாஷ்யந்தான். பகவத்பாதாளின் பாஷ்யநடையானது மிக லளிதமாயிருப்பதால் மேலாகப் பார்ப்பவர்களுக்கு அது மிகஸுலபம் போல் தோன்றக்கூடும். ஆனால் அதன் உட்கருத்துக்களை ஊன்றிப் பரிசீலிப்பவர்களுக்கு அது மிகக் கம்பீரமாகவும் அர்த்த புஷ்டியுடனும் இருப்பது புலனாகும்.

ஆகையால் இந்தப் பகவத்பாதபாஷ்யமானது ஆபாதவ்யுத்பத்தியுள்ளவர்களுக்கு வெகுஸுலபம் போலவும் நியாய மீமாஸாதி மற்றச் சாஸ்திரங்களில் தேர்ச்சிபெற்ற பண்டிதர்களுக்கு மிகக் கம்பீரமாகவும் தோன்றுகிறது என்றால், இது விசித்திரமாயிருக்கிறதல்லவா? ஆனால் இந்த விசித்திரத்தன்மைதான் நமது பகவத்பாதாளின் பாஷ்யங்களுக்கு அலங்காரமாகவும் பெருமை தரக்கூடியதாகவும் விளங்குகிறது.

**अविज्ञातं विजानतां विज्ञातमविजानताम्**, என்ற கேனோபநிஷத் வாக்கியத்தில் பிரம்ம ஸ்வரூபமானது தெரிந்தவர்களுக்குத் தெரியாததாகவும் தெரியாதவர்களுக்குத் தெரிந்ததாகவும் ஏதோ புதிராக இருப்பதுபோல் ஆசார்யாளின் பாஷ்யமும் ஒரு புதிராகவே தோன்றுகிறது. ஏனென்றால் லளிதநடையைப் பார்த்து இது வெகு ஸுலபம் என்று நினைக்கும் ஆபாதக்ஞானிகளுக்குப்

பாஷ்யார்த்தங்களெல்லாம் நன்ருகப் புலப்படுவதுபோல் தோன்றும். எல்லாச் சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த அறிவாளிகளுக்கோ வெகு கம்பீரமாக இருப்பதும் அதிலுள்ள எல்லா அர்த்தங்களையும் கண்டுபிடிக்கமுடியாதபடி ஸமுத்திரம் போல் தோன்றுவதும் ஸஹஜமாயிருக்கிறது.

பகவத்பாதாளின் பாஷ்யம் அதிகம்பீரம் என்பதற்கு வேறு சான்றே வேண்டாம். அதன் வியாக்கியான உபவியாக்யானங்கள் பெருகியிருப்பதைப் பார்த்தாலே அதன் கம்பீரத்தன்மையைப்புரிந்துகொள்ளலாம். ब्रह्मसूत्रम् , भाष्यम् , भामती, कल्पतरु, परिमलम् , என்ற ஐந்து கிரந்தங்கள் (पञ्चग्रन्थी) ஏற்பட்டிருப்பது போலவே सूत्रम् , भाष्यम् , पञ्चपादी, विवरणम् , तत्त्वदीपनम् , என்ற இன்ஞெரு पञ्चग्रन्थियும் ஏற்பட்டு இரு பிரிவுகளாகப் பிரிந்த கங்கா நதி போல் நமது பாக்கிய விசேஷத்தால் பாரததேசமெங்கும் பிரசாரம் அடைந்திருக்கிறது. இதுதான் भामतीप्रस्थानं என்றும் விவரண प्रस्थानम् என்றும் வழங்கப்பட்டுவருகிறது.

மிகப்பரிசுத்தமாயும் அதிகம்பீரமாயும் உள்ள கங்கா நதியின் புண்ணியதீர்த்தமானது பலகால்வாய்கள் வழியாக ப்ரவகித்துப் பற்பல பூமிகளிலும் பரவி அந்த அந்தப் பூமி ஸாரத்தையனுஸரித்துக் கோதுமை முதலிய நவதான்யங்களையும் காய்கறிகளையும் விளைவிப்பதுபோல் நமது ஆசார்யாளின் பாஷ்ய கங்கையானது அநேக வியாக்கியானங்களாகிய வாய்க்கால்களின் வழியாகப் பெருகிப் பற்பல அதிகாரிகளின் மனப்பக்குவத்துக்குத் தகுந்தபடி அவரவர்களின் மனமாகிய வயல்களில் பரவி ஞானப் பயிரை விளைவித்து முடிவில் மோக்ஷஸுகத்தை அளித்து வருவதை இன்றுவரையில் நாம் பிரத்யக்ஷமாகவே பார்த்து அநுபவித்து வருகிறோம்.

அவ்விதமான பாஷ்ய கங்கா நதியின் ஒரு முக்கிய வாய்க்கால் போலவே ஸ்ரீஸதாசிவேந்திராள் இயற்றிய ब्रह्मसूत्रवृत्तिः என்ற இந்த உத்தமமான கிரந்தமும் விசேஷமாக விளங்கிவருகிறது. கங்கா நதியின் பக்கத்து வயல்களுக்குக் கங்காதீர்த்தம் ஸாக்ஷாத்தாகவே பாய்ந்து பயிர்களை விளைவித்தபோதிலும் தூரதேசத்தி

லிருக்கும் வயல்களுக்கு வாய்க்கால் மூலம்தான் பாசனம் கிடைக்க வேண்டும். அது போலவே பாஷ்யத்தை ஸாக்ஷாத்தாகவே பார்த்து விசாரம் செய்யும் முக்யாதிகாரிகளுக்குப் பாஷ்யார்த்தங்கள் ஸந்தேகமன்னியில் புலனாகக்கூடியதா யிருந்தபோதிலும் மந்த மத்யம அதிகாரிகளுக்கு வியாக்யானங்கள் மூலம்தான் பாஷ்யார்த்தங்கள் விசதமாக விளங்கக்கூடும். பாமதீ முதலான வியாக்யானங்களோ நியாய மீமாம்ஸாதி பிரக்ரியைகளை வாரி வழங்கிவிடுவதால் அவை சாஸ்திரக்ஞர்களுக்குத்தான் உபயோகப்படும். ராமாநந்தீயம் முதலிய சில லளிதமான வியாக்யானங்கள் இருந்தபோதிலும் அவை பல சாஸ்திரவிஷயங்களைச் சர்ச்சைசெய்வதால் அவை ஸாமான்ய ஜனங்களுக்கு உபயோகப்படா. வெகு காலமும் தாமதமும் ஏற்படக்கூடும்.

ஸ்ரீஸதாசிவேந்திராளின் பிரம்மஸூத்திர விருத்தியோ வெகு லளிதமாகவும் சுருக்கமாகவும் முக்ய விஷயங்கள் அடங்கியதாகவும் இருப்பதால் மந்த மத்யம அதிகாரிகளுக்கு மிகவும் பயனளிக்கக் கூடியதாகவே இருக்கிறது. உலகத்தில் முக்யாதிகாரிகள் கோடியில் ஒருவரோ இருவரோதாம் இருப்பார்கள். மந்தாதிகாரிகளோ ஏராளமானவர்கள். அந்தப் பல கோடி ஜனங்களையும் கைதூக்கி விடுவதற்காகவே ஸதாசிவேந்திராள் பரமகருணையுடன் இந்த ब्रह्मसूत्रावृत्ति யை எழுதி நம்மை அனுக்கிரஹித்திருக்கிறார்கள்.

நமது प्रसन्नगम्भीर (ப்ரஸந்ந கம்பீர) மான ஆசார்ய பாஷ்யத்துக்கு அனுகுணமான விருத்தி இது ஒன்றுதான்.

பிரம்ம சூத்திரத்திலும் பகவத்பாத பாஷ்யத்திலும் நாலு அத்யாயங்களும், பதினாறு பாதங்களும், 192 அதிகரணங்களும் அடங்கியிருக்கின்றன. இதை மூலமாக வைத்துக்கொண்டுதான் முன்காலத்தில் ரூபாய் அணா பைசா வியவஹாரங்கள் ஏற்பட்டனவோ என்று அனுமானிக்க வேண்டியிருக்கிறது. जिज्ञासाधिकरणं शास्त्रयोनित्वाधिकरणं முதலியவைகளில் பல வர்ணகங்களும் சேர்ந்திருப்பதால் அவைகளையும் சேர்த்தே இந்த எண்ணிக்கை பூர்த்தியாகிறது. இந்த ஸூத்திர விருத்தியில் சில வர்ணகங்களை விட்டிருப்பது அதிக விஸ்தாரம் வேண்டாமென்பதற்காகத்தான்.

ஆனந்தமயாதிகரணத்தில் ஏகதேசிமதத்துக்கும் பகவத்பாதாளின் ஸித்தாந்தத்துக்கும் தகுந்தபடி ஸூத்திரார்த்தங்களை யோஜனம் செய்து வித்யார்த்திகளுக்கும் வித்வான்களுக்கும் உபகாரம் செய்திருப்பது அஸாதாரணமான கார்யமாகும். மேலும் இந்த விருத்திகாரர் ஆரம்ப மங்கள சுலோகத்தில் आत्म-ज्योतिरुपास्महे என்றும் கடைசியில் तदस्मि ब्रह्मचिद्घनम्, என்றும் தம்முடைய ஸ்வாநுபவத்தையே விளக்கியிருக்கிறார்கள். ராமானந்தர் முதலான வியாக்யாதாக்கள் रामनाम्निपरेधाम्नि, श्रीरामंसिद्धमत्तारम्, என்றெல்லாம் ஸகுணஸ்வரூபாநு ஸந்தானம்தான் செய்திருப்பதாகத் தெரிகிறது. பிரம்மேந்திராளோ நிர்க்குணப்ரம்மத்தை அபேதபாவனையுடன் அனுஸந்தானம் செய்வதிலிருந்தே அவர் ब्रह्मविद्वरिष्ठ ராயிருப்பது புலனாகும். வியாகரண மஹாபாஷ்யம், சேகரம் முதலிய கிரந்தங்கள் இருந்தபோதிலும், கௌமுதிக்ரந்தம் எப்படி எல்லோருக்கும் உபகாரம் செய்கிறதோ, அதைப்போலவே வேதாந்த சாஸ்திரத்துக்கு இந்த விருத்தியானது மிகவும் உபகாரமாயிருப்பதுடன் ஆத்மாநுபவத்தையும் உண்டுபண்ணக்கூடியதாயிருப்பதால் எல்லோரும் இதைப் படித்து ஸகல சிரேயஸ்ஸையும் அடையும்படி பிரார்த்திக்கிறோம். இந்த முன்னுரையில் ஸம்க்ஷேபமாகவே சொல்லப்பட்டிருந்தாலும் இந்த விருத்தியின் பெருமை ஒருவாறு விளங்கக்கூடும். ஆனாலும் இந்த விருத்திகாரர்கள் காண்பித்த வழியிலேயே இதுவரையில் சுருக்கமாகச் சொன்ன அதிகரண ஸம்பந்தமான விஷயங்களைக் கொஞ்சம் விரிவாக எடுத்து உரைப்போம்: இந்தக் கிரந்தாரம்பத்தில் इहखलु भगवान् बादरायणः प्रेक्षावत्प्रवृत्त्यौपयिकं आपाततः त्र्यन्तवचोभिः प्रतिपन्नं अनुबन्धजातं न्यायतो निर्णेतुमिदमारचययांचकार, अथातो ब्रह्मजिज्ञासा इति । என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பிக்கிறார். இதன் கருத்துப் பின்வருமாறு, ஒருவன் ஒரு கிரந்தத்தைப் படிக்க ஆரம்பிக்கும்போது, ' இதில் என்ன விஷயம் ?' என்று முதலில் அறிய விரும்புகிறான். அதற்குப் பிறகு, 'இந்தக் கிரந்தத்தைப் படிப்பதால் நமக்கு என்ன பிரயோஜனம் ?' என்று அறிய ஆவல்கொள்வான். அதன் பிறகு, ' இந்தக் கிரந்தத்தைப் படிக்க நான் தகுந்த அதிகாரிதானா ?' என்று தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறான். இவ்வள

ஆகவே பல வர்ணகங்களுடன் கூடிய இந்த 192 அதிகரணங்களையும் ஸ்ரீ ஸதாசிவேந்திராள் அந்த அந்த விஷய வாக்கியங்களைக்காட்டி விசதப் படுத்தியிருக்கிறார். அதிகரணம் என்றால்.

विषयोतिशयश्चैव पूर्वपक्षस्तथोत्तरम् ।
प्रयोजनं संगतिश्च शास्त्रेऽधिकरणं स्मृतम् ॥

என்ற வசனப்பிரகாரம். விஷயம், ஸம்சயம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம், ஸங்கதி, பலம், என்ற ஆறு அங்கங்களின் ஸமுதாயம் தான். இந்த ஆறு அங்கங்களையும் ஒவ்வோர் அதிகரணத்திலும் பிரம்மேந்திராள் வெகு ஸ்பஷ்டமாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். ஸங்கதி என்றால் ஸம்பந்தம். அது ஐந்து விதம். श्रुतिसंगतिः शास्त्रसंगतिः, अध्यायसंगतिः पादसंगतिः अधिकरणसंगतिः என்பவை அதன் பெயர்கள். முதலில் ஸமன்வயாத்யாயமாகையால் ஒவ்வோர் அதிகரணத்தில் உள்ள விஷயவாக்கியங்களுக்கும் ஸகுணத்திலோ நிர்க்குணப் பிரம்மத்திலோ உசிதம் போல் ஸமன்வயம் ஏற்படுவதைப் பாஷ்யகாரராள் தெரிவித்த போதிலும் விருத்திகாரராள் அதைச் சுருக்கமாக எடுத்துக் காட்டி மனத்தில் பதிய வைக்கிறார்.

முதல் அத்யாயம் முதல் பாதத்தில்स्पष्टब्रह्मलिंगकवाक्यங்களுக்கு ஸமன்வயத்தைக் காண்பித்திருக்கிறார்கள். स्पष्ट மென்றால் என்ன.

जीवादिविषयकत्वेनसंभाव्यमान स्वारस्यकलिंगानभिभूतत्वम् ।

அதாவது ஜீவபரமோ என்று ஸந்தேகப் படக்கூடிய லிங்கங்கள் இல்லாமலிருப்பது என்று அதை நிர்வசனம் செய்வார்கள். இதையெல்லாம் இந்த விருத்திகாரர் நன்றாக விளக்கி स्पष्टब्रह्मलिंगं எது अस्पष्टब्रह्मलिंगं எது என்பதை ஆங்காங்கு காண்பித்திருக்கிறார்கள். அனேகமாகப் பாஷ்யவாக்கியங்களையும் தம் வாக்கியங்களுடன் இணைத்தே இந்தக் கிரந்தம் எழுதியிருப்பதால் தங்கமும் ரத்னங்களும் இழைத்தாற்போல் வெகு அழகாயிருப்பதைப் பாஷ்யம் வாசித்து அநுபவித்தவர்கள் உணருவார்கள். இதைப் பின்னால் விளக்குவோம்.

வையும் தெரிந்துகொண்ட பிறகு, ' இந்தக் கிரந்தத்துக்கும் விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்?' என்றும், 'பிரயோஜனத்துக்கும் தனக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா?' என்றும் ஜிக்ஞாஸை ஏற்படுகிறது. இதைத்தான்.

" सिद्धार्थं सिद्धसंबन्धं श्रोतुं श्रोता प्रवर्तते ।
ग्रन्थादौ तेन वक्तव्यः संबन्धः सप्रयोजनः ॥

என்று பூர்வாசார்யர்கள் சொல்லி வருகிறார்கள். இந்த शारीरक-मीमांसा என்ற கிரந்தத்திலும் அவ்விதமே விஷயம், பிரயோஜனம், அதிகாரி, சம்பந்தம். என்ற நான்கையும் காண்பிக்கவேண்டும். இவ்வளவையும் " अथातो ब्रह्मजिज्ञासा " என்ற எட்டெழுத்துக்களாலேயே விளக்க வேண்டும். அது முடியுமா என்றால் முடியும் என்றே விருத்திகாரராள் ஸாதிக்கிறார்கள். ब्रह्मजिज्ञासा इत्यनेन अज्ञातत्वेन विषयत्वं ज्ञातत्वेन प्रयोजनत्वं च ब्रह्मण उक्तं भवति என்ற வாக்யத்தால் இதை விசதப்படுத்துகிறார்கள். அதாவது ब्रह्मजिज्ञासा என்ற பதத்திலிருந்தே விஷயம், பிரயோஜனம், சம்பந்தம், அதிகாரி என்று இந்த நான்கும் (अनुबन्धचतुष्टयम्) கிடைத்துவிடுகின்றன என்கிறார். எப்படியென்றால்:

உலகத்தில் எல்லோரும் விரும்பக்கூடிய ஸுகவிசேஷமானது மோக்ஷம்தான். அந்த மோக்ஷமும் துக்கநிவிருத்தியாகவோ ஆனந்த அவாப்தியாகவோதான் இருக்கவேண்டும். துக்கநிவிருத்திதான் மோக்ஷமென்று வைத்துக்கொண்டால் உலகமெல்லாம் பிரம்மத்தினிடம் ஆரோபிக்கப்பட்டிருப்பதுபோல் துக்கமும் ஆரோபிதமாகத்தான் இருக்கவேண்டும். அந்தத் துக்கமெல்லாம் நிவிருத்தியாகிறது என்றால் துக்கத்துக்கெல்லாம் நாசம் ஏற்படுகிறது என்றுதான் பொருள் கொள்ளவேண்டும். நாசம் என்றால் அபாவம்; அபாவமெல்லாம் அதிகரணஸ்வரூபம் என்பதுதான் நம் ஸித்தாந்தம். ஆகையால் துக்கநிவிருத்தி என்ற அபாவமும் அதிகரண ஸ்வரூபம்தான். अधिष्ठानावशेषो हि नाशः कल्पितवस्तुनः என்ற நியமப்பிரகாரம் கல்பிக்கப்பட்ட துக்கங்களெல்லாம் நிவிருத்தியாவது என்றால் கல்பனாதிஷ்டானமான பிரம்மரூபமாக ஆகிறது என்பது ஸ்பஷ்டமாகிறபடியால் துக்கநிவிருத்திரூபப் பிரயோஜனமானது பிரம்மஸ்வரூபம்தான்.

அப்படியே ஆனந்த அவாப்தி என்ற மோக்ஷமும் பிரம்ம ஸ்வரூபம்தான். ஏனென்றால் பிரம்மவித்துக்கு ஆனந்தம் வேறே என்றும் அதை அடையக்கூடிய, தான் வேறெயென்றும் வேற்றுமை கிடையாது. கொஞ்சமாவது வேற்றுமையிருந்தால் यदा-ह्येवैष एतस्मिन्तुदरमन्तरं कुरुते । अथतस्य भयं भवति என்ற சுருதிவாக்யப்பிரகாரம் பயம்தான் உண்டாகுமே தவிர அபயப்ரம்மப்ராப்தி உண்டாகாது. ஆகையால் ஆனந்தஅவாப்தியென்றால் ஆனந்த ஸ்வரூபமாகவே பிரகாசிப்பது என்றுதான் அர்த்தம் கொள்ள வேண்டும். இதைத்தான் வேறிடத்தில் ब्रह्मवित्ब्रह्मैव भवति என்று சுருதியே நிரூபணம் செய்கிறது. தைத்திரீயத்திலும் सोऽश्नुते सर्वान् कामान् सह । ब्रह्मणा विपश्चितेति என்று ब्रह्मस्वरूप மாகவே எல்லா ஆனந்தங்களையும் ब्रह्म வித்தானவன் அடைகிறான் என்று விளக்கப்பட்டிருக்கிறது. ஆகையால்தான் பாஷ்யகாரர்களும் आनन्दानन्दिनोश्चात्रएकत्वम् என்று மோக்ஷதசையில் தான் ஆனந்தஸ்வரூபமாகவே பிரம்மவித்தானவன் ஆய்விடுவதால் பேதம் கிடையாது என்று தீர்மானித்திருப்பதால் ஆனந்த அவாப்தி என்பதற்கு ஆனந்தஸ்வரூபப்பிரம்மமாகவே தோன்றுவது என்றுதான் அர்த்தம்.

பிரம்மம், ஆனந்தம் இரண்டும் ஒன்றுதான். ஆகையால் ब्रह्मजिज्ञासा என்ற ஸூத்திரத்தில் உள்ள பிரம்மபதத்தினால் இரண்டுவிதமான (दुःखनिवृत्तिः सुखावाप्तिः) பிரயோஜனங்களும் ஸாதிக்கப்பட்டிருப்பதால் ब्रह्मणः ज्ञातत्वेनप्रयोजनत्वम् என்று விருத்திகாரர்கள் சுருக்கமாக இரண்டு பதங்களாலேயே अनुबन्ध चतुष्टयத்திலுள்ள ப்ரயோஜனம் என்ற அம்சத்தை விளக்கிவிட்டார்கள். ஆகவே இந்தச் சாரீரக மீமாம்ஸாசாஸ்திரம் வாசிப்பவர்களுக்கு மேற்படி இரண்டுவிதமான பிரயோஜனங்களும் கிடைக்கக்கூடும். ஆகையால் தகுந்த அதிகாரிகள் இந்தக் கிரந்த விசாரம் செய்யலாம் என்பது தீர்மானம். இதைத்தான் விருத்திகாரர்கள் सूत्रार्थத்தை விவரணம் செய்யும்பொழுது, मोक्षसाधन ब्रह्मापरोक्षज्ञानाय (वे)दान्तविचारः कर्तव्यः என்று வர்ணிக்கிறார்கள்.

பிரம்மபதத்தால் பிரயோஜனம் ஸித்திப்பதுபோல் விஷயமும் ஸித்திக்கிறது. எதை விசாரிக்க வேண்டுமென்ருல் தெரியாத வஸ்துவைத்தான் என்று எல்லோரும் அறிவார்கள். தெரிந்த விஷயத்தில் ஜிக்ஞாஸை (தெரிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பம்) ஒருவருக்கும் ஏற்படாது. நல்ல வெளிச்சத்தில் இருக்கும் குடத்தைப் பார்த்து, 'இதென்ன வஸ்து?' என்று யாராவது ஸந்தேஹிப்பார்களா அல்லது விசாரிக்கத்தான் செய்வார்களா? ஒருபோதும் மாட்டார்கள். பிரம்மம் தெரியாதபடியால்தான் அதைப்பற்றி அறிய விரும்புகிருேம். ஆகையால்தான் ब्रह्मणः अज्ञातत्वेन विषयत्वम्, என்று விருத்திகாரர்கள் கூறுகிருர்கள். அதாவது ஒரே பிரம்மமானது அக்ஞாதாவஸ்தையில் விஷயமாகவும் க்ஞாதாவஸ்தையில் பிரயோஜனமாகவும் விளங்கிவருகிறது என்பது தாத்பர்யம்.

இவ்விதம் விஷயம், பிரயோஜனம் இரண்டும் ஸித்தித்தபோதிலும் அதிகாரி யார் என்று தெரியவில்லையே யென்ருல் பிரம்மத்தை அறியவேண்டுமென்று யார் விரும்புகிருர்களோ அவர்கள்தான் அதிகாரி என்று தாளுகவே தெரிந்துகொள்ளலாம். ஆனல் பிரம்மத்தை அறிய எல்லோரும்தான் விரும்புவார்கள். அவர்களெல்லாம் அதிகாரிகள்தாளு என்ருல் அது கிடையாது. साधनचतुष्टयसंपत्तिயுள்ளவன்தான் அதிகாரி என்பது अथ சப்தத்தால் கிடைக்கிறது. अथ என்ருல் साधनचतुष्टयसंपत्ति உண்டான பிறகு என்று அர்த்தம். அதென்னவென்ருல் नित्यानित्यवस्तुविवेकः इहामुत्रार्थफलभोगविरागः शमादिषट्कसंपत्तिः मुमुक्षुत्वम् என்ற இந்த நான்கு ஸாதனங்களும் பக்வமாயிருப்பதுடன் மோக்ஷத்தில் அதிதீவ்ரமான இச்சை ஏற்படுவது என்று தாத்பர்யம். அந்த நான்கும் ஸித்தித்த பிறகுதான் பிரம்மவிசாரம் செய்யவேண்டும் என்று ஸூத்ரார்த்தம் கிடைப்பதால் அவ்வித साधनसंपत्ति உள்ளவன்தான் அதிகாரி என்பது अर्थात् கிடைக்கிறது. இப்படியே கிரந்தத்துக்கும் விஷயத்துக்கும் प्रतिपाद्यप्रतिपादकभावसंबन्धः பிரயோஜனத்துக்கும் அதிகாரிக்கும் प्राप्यप्रापकभावसंबन्धः என்று நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

விருத்திகாராள் குறிப்பிட்டிருக்கும் ஸாதன சதுஷ்டய ஸம்பத்தியைக் கொஞ்சம் விளக்குவோம் (1) नित्यानित्यवस्तुविवेकः பிரம்மம் ஒன்றுதான் நித்யம்; மற்றவையெல்லாம் அநித்யம், சாசுவதமில்லாதவை என்று சுருதி யுக்தி அநுபவங்களால் பரிசீலனம் செய்வது (2) इहामुत्रार्थफलभोगविरागः— இஹலோகத்திலுள்ள சுகஸாதனங்கள் धनकनकवस्तुवाहनादि அழிந்துபோவது போலவே பரலோகங்களில் உள்ளவைகளும் அழியக்கூடியவைதாம் என்று அறிந்து அவைகளில் துச்ச புத்தியும் கசப்பும் ஏற்படுவது. (3) शमादिसाधनसंपत्, शमदमोपरति तितिक्षा श्रद्धासमाधानानि (1) शमம் என்றால் அந்தர் இந்திரியநிக்ரஹம் (2) दमம் என்றால் பஹிரிந்திரியங்களான சக்ஷுராதிநிக்ரஹம், (3) उपरतिः ஸர்வஸங்கபரித்யாகம் அல்லது ஸந்யாஸம் (4) श्रद्धा குரு வேதாந்த வாக்கியங்களில் விச்வாஸ புத்தி. (5) तितिक्षा சீதோஷ்ணாதிக்ளை ஸஹனம் செய்துகொள்வது. (6) समाधानम् என்றால் தன் லக்ஷ்யமான ஆத்மஸ்வரூபத்திலேயே மனத்தை ஏகாக்ரப்படுத்துவது. இந்த ஆறும் சேர்ந்தால் மூன்றாவதான शमादिषट्कसंपत्तिः என்ற ஸாதனம் ஏற்படுகிறது. நான்காவது ஸாதனம் मुमुक्षुत्वम्, எப்படியாவது மறுஜன்மம் எடுக்காமல் மோக்ஷம் அடையவேண்டுமென்ற தீவ்ரமான அபிலாஷை.

மேலே சொன்ன ஸாதனங்களெல்லாம் பூர்ணமாயிருந்தால் தான் பிரம்மவிசாரத்துக்கு அதிகாரியாகிறான் என்பதை விருத்திகாராள் நன்கு எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். साधनचतुष्टय संपन्नस्य अधिकारिणः मोक्षसाधन ब्रह्मापरोक्षज्ञानाय वेदान्तविचारः कर्तव्यः என்ற பங்க்தியில் விருத்திகாரர்களது அபிப்பிராயம் நன்றாக விளங்குகிறது. அதாவது வேதாந்த விசாரம் பிரம்ம விஷயமான அபரோக்ஷஸாதனம் ஏற்படுவதற்காகத்தான். அதுவும் மோக்ஷசுகத்தை அடைவதற்காகத்தான். அதற்குத் தகுதியுள்ளவன் ஸாதன சதுஷ்டயஸம்பத்தி யுள்ளவன்தான் என்பதை வெகு ஸ்பஷ்டமாக விளக்கிவிட்டார்கள். இவ்விதம் பாஷ்யத்தில் ஆங்காங்கு ஒளிந்திருக்கும் விசேஷ அர்த்தங்களை எடுத்துக்காட்டியிருக்கும்

நமது விருத்திகாரருடைய உபகாரத்தை நாம் என்றும் மறக்க முடியாது.

மற்ற விருத்திகளைவிட ஸ்ரீஸதாசிவேந்திர விருத்திக்கு வேறு என்ன விசேஷம் உண்டு என்றால் ஒவ்வோர் அதிகரணத்திலும் விஷயம், ஸம்சயம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம், ஸங்கதி, பலம், இந்த ஆறு அங்கங்களையும் விசதமாக எடுத்துக் காண்பித்திருப்பது அஸாதாரணமான குணம்தான். ஆரம்பத்தில் ஸூசனையாகக் காண்பிக்கப்பட்டிருந்தபோதிலும் இப்பொழுது இரண்டொரு திருஷ்டாந்தங்களுடன் அதை விளக்கிக் காண்பிக்கிறோம்.

बृहदारण्यकத்தில் आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्योमन्तव्योनिदिध्यासितव्यः என்று மைத்ரேயீ பிராம்மணத்திலுள்ள இந்த வாக்யத்தில் श्रोतव्यः என்ற பதத்துக்கு श्रवणं செய்யவேண்டும் என்று அர்த்தம். சிரவணமென்றால் सर्वेषां वेदान्तानां अद्वितीये ब्रह्मण्येव-तात्पर्यं इति निर्णयानुकूलो मानसोव्यापारः எல்லா உபநிஷத் வாக்கியங்களுக்கும் ஓரே பிரம்மத்தினிடம்தான் தாத்பர்யம் (கருத்து) என்று தீர்மானிப்பதற்கு அனுகுணமான மனோவிருத்திதான் சிரவணம் என்பது அதன் அர்த்தம். வெறும் காதினால் கேட்பது மட்டும் சிரவணமாகாது. ஏனென்றால் द्रष्टव्यः என்ற பதத்தினால் आत्मदर्शनமே उद्देश्यமாகக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது ஆத்மதர்சனத்தை உத்தேசித்துச் சிரவணம் விதிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஆத்மதர்சனமானது வேதாந்த விசாரத்தால்தான் ஏற்படமுடியுமே தவிர வெறும் காதினால் கேட்பதால் மட்டும் ஏற்படமாட்டாது. ஆகையால் श्रवणं என்பது ஆத்ம விசாரம் என்ற பொருள் கிடைக்கிறது. அந்த விசாரமும் அவரவர்களது மனத்துக்குத் தோன்றியபடியெல்லாம் செய்யக்கூடாது. அதற்கு श्रुतिलिंगवाक्यप्रकरणस्थानसमाख्याः என்ற பூர்வமீமாம்ஸா நியாயங்களையும், उपक्रमोपसंहारौ अभ्यासोऽपूर्वताफलम् । अर्थवादोपपत्तीच लिंगं तात्पर्यनिर्णये । என்ற உத்தரமீமாம்ஸா நியாயங்களையும் வைத்துக்கொண்டு உபநிஷத்வாக்யங்களை விசாரணம் செய்தால்தான் முடியும். श्रुतिवाक्यங்களின் தாத்பர்யமும் அப்பொழுதுதான்

விளங்கும். அப்படி விசாரம் செய்யும் முறையைத்தான் ஸ்ரீபாத ராயணாசார்யாள் நமக்குக் காண்பித்திருக்கிறார்கள். ஆகையால் இந்த शारीरकमीमांसा என்ற விசார ரூபமான சாஸ்திரமே श्रोतव्यः என்ற விதிவாக்கியத்துக்கு விஷயமாகிறது. இதைத்தான் विषयो विशयश्चैव என்ற இடத்தில் விஷயம் கூறுவார்கள்.

இவ்விதமான ஒரு விசார ரூபமான வேதாந்த சாஸ்திரம் ஏற்படவேண்டுமா வேண்டாமா என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. விஷயப்ரயோஜனங்கள் ஸம்பவித்தால் இந்தச் சாஸ்திரத்தை ஆரம்பிக்கலாம். இல்லாவிட்டால் ஆரம்பிக்கக்கூடாது. விஷயமும் பிரயோஜனமும் ஸம்பவிக்குமா ஸம்பவிக்காதா என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. இவ்வித ஸந்தேஹந்தான் संशयः என்ற இரண்டாவது அதிகரணாங்கமாகச் சொல்லப்படுகிறது.

श्रोतव्यः என்ற விதிக்கு வேதாந்த விசார ரூபமான இந்தச் சாஸ்திரம் விஷயம். அந்தச் சாஸ்திரத்துக்கோ ஜீவப்பிரம்ம ஐக்யம் விஷயம். ஏனென்றால் சாஸ்திரமானது ஜீவப்பிரம்ம ஐக்யத்தைத்தான் பிரதிபாதனம் செய்கிறது. அந்த ஜீவப்பிரம்ம ஐக்யம் ஸம்பவிக்குமா ஸம்பவிக்காதா என்ற ஸம்சயம்தான் अधिकरणांगसंशयः என்று இங்கே கூறப்படுகிறது. जीवब्रह्मैक्यं ஏன் ஸம்பவிக்காது என்றால் नाहं ब्रह्म என்ற பிரத்யக்ஷம் எல்லோருக்கும் இருப்பதால்தான். தவிரவும் कर्तृत्वादि தர்மங்களுள்ள ஜீவனுக்கும் कर्तृत्वादिरहितனான பிரம்மத்துக்கும் ஒன்றுக்கொன்று விருத்த தர்மங்கள் இருப்பதால் ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் ஐக்யம் ஏற்படாது. இருளுக்கும் பிரகாசத்துக்கும் ஐக்யம் ஏற்பட முடியாததுபோல்தான் இதுவும். இதைத்தான் जीवपरमात्मानौ ऐक्यशून्यौ परस्परविरुद्धधर्मवत्वात् तमःप्रकाशवत् என்று அனுமானப்ரயோகத்தால் வியாக்யாதாக்கள் விசதப்படுத்துகிறார்கள். ஆகவே பிரத்யக்ஷத்தாலும் அனுமானத்தாலும் வேதம் தோன்றுவதால் ஜீவப்ரம்ம ஐக்யம் என்ற விஷயம் ஏற்படமுடியாது என்று பூர்வபட்சக்காரர்கள் சொல்கிறார்கள்.

ஸித்தாந்திகளோ ஜீவனிடம் தோன்றும் கர்த்ருத்வாதிகள் வாஸ்தவமல்ல. कर्तृत्वं भोक्तृत्वं முதலிய தர்மங்களெல்லாம் ஜீவ

னிடத்தில் ஆரோபிதம்தான். வாஸ்தவத்தில் அந்தக்கரணத்தின் தர்மங்கள்தான் அவை. அந்தக்கரணம் வேறு, ஜீவன் வேறு என்ற பகுத்தறிவு இல்லாதபடியால் அந்தக்கரணத்திலுள்ள தர்மங்கள் ஆத்மாவிடம் தோன்றுகின்றன. இரும்புத் துண்டை நெருப்பில் காய்ச்சினல் கறுப்பாயிருந்த இரும்பும் கூடச் சிவப்பாக மாறுகிறது. குளிர்ச்சியாயிருந்த இரும்புங்கூடத் தஹிக்கிறது. அப்பொழுது இரும்பு சுடுகிறது (अयोदहति) என்ற வியவஹாரமும் ஏற்படுகிறது. दग्धृत्वं (சுடுதல்) என்ற தர்மம் நெருப்பினுடையதாயிருந்தபோதிலும் அந்த நெருப்பானது இரும்புடன் இரண்டறக் கலந்து விட்டபடியால் இரும்பையும் நெருப்பையும் ஒன்ருகவே பாவித்து अयोदहति என்ற வியவஹாரம் ஏற்படுவதில்லையா? அதுபோலவேதான் அந்தக்கரணம் வேறு சைதன்யம் வேறு என்று பிரித்தறியாமையால் अहं कर्ता अहं भोक्ता என்ற வியவஹாரம் ஏற்படுகிறது.

வாஸ்தவத்தில் சுத்தசைதன்ய ஸ்வரூபமான ஜீவனுக்கு कर्तृत्वभोक्तृत्वादिகளான ஸம்ஸார ஸம்பந்தம் கிடையாது என்று தெரிந்துகொண்டால் அதாவது அந்தக்கரணுதி உபாதிகளை விட்டு ஜீவனை விலக்கினுல் அப்படிப்பட்ட ஜீவனுக்குப் பிரம்மத்துடன் ஐக்யம் ஏற்படலாம். ஜீவப்பிரம்ம ஐக்யம் என்ற விஷயம் ஸித்திக்கிறது. விஷயம் ஸித்தித்தால் பிரயோஜனமும் கூடவே ஸித்திக்கிறது. ஏனென்ருல் ஜீவப்பிரம்ம ஐக்யமானது அறியப்படாமல் இருக்கும்போது விஷயமாகச் சொல்லப்படுகிறது. அறியப்பட்டாலோ அதுவே பிரயோஜனமாகிறது. இதைத்தான் இந்த விருத்திகாரர்கள் ஆரம்பத்திலேயே अज्ञातत्वेन विषयत्वम् तस्यैव ज्ञातत्वेन प्रयोजनत्वम् । என்கிருர்கள். அதாவது தான் தேஹேந்திரியாதி உபாதிகளுடன் கூடிய ஜீவன் என்று எண்ணுகிறவரையில்தான் அவன் ஜீவனுக முடியும். சாஸ்திராசார்ய உபதேசத்தால், தான் பிரம்மம்தான் என்று தெரிந்துகொண்டால் பிரம்மமாகவே ஆய்விடுகிருன். ஆகவே அஞ்ஞானுவஸ்தையில் ஜீவனுகவும் ஞானுவஸ்தையில் பிரம்மமாகவும் ஒரே வஸ்துதான் விளங்குகிறது. இவ்விதம் जीवब्रह्मैक्यரூபமான

விஷயப்பிரயோஜனங்கள் ஸித்திப்பதால் சாஸ்திரவிசாரம் செய்ய லாம் என்று ஸித்தாந்திகள் சொல்கிறார்கள்.

இவ்விதம் அதிகரண அங்கங்களான விஷயாதிகள் நான்கு: அதாவது विषयः, संशयः, पूर्वपक्षः, सिद्धान्तः என்ற நான்கும் விருத் திகாராளுடைய வாக்கியங்களை அனுஸரித்தே இதுவரையில் நிரு பிக்கப்பட்டிருக்கின்றன. இனிமேல் அதற்கடுத்த அதிகரண அங்கமான संगतिः என்பதைப்பற்றி விளக்குவோம். ஆரம்பத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டதைச் சற்று விரிவாக எடுத்து உரைப் போம். ஏற்கனவே அதன் பெயர்களை श्रुतिसंगतिः, शास्त्रसंगतिः, अध्यायसंगतिः, पादसंगतिः, अधिकरणसंगतिः என்று குறிப்பிட்டிருக் கிறோம். அதையே சற்று விரிவாக விருத்திகாராளின் வாக்கியங் களை யனுஸரித்து விசதப்படுத்துவோம்.

(1) श्रुतिसंगतिः = அதாவது சுருதிவாக்கியங்களுக்கும் இந்த ஸூத்திரத்துக்குமுள்ள ஸம்பந்தம் என்று அர்த்தம். विचारं विषयवेदान्तवाक्यैः स्वार्थनिर्णयाय अस्य अपेक्षितत्वात् श्रुतिसंगतिः, என்று விருத்திகாராள் அதை நிர்வசனம் செய்கிறார்கள். அதன் கருத்துப் பின்வருமாறு: விசாரம் என்றால் शारीरकमीमांसाशास्त्रं என்று அர்த்தம். அது எதைப்பற்றி விசாரிக்கிறது என்றால் வேதாந்த வாக்கியங்களைப்பற்றித்தான். ஆகவே விசாரத்துக்கு விஷயம் வேதாந்த வாக்யங்கள். அந்த வாக்கியங்கள் தம் அர்த் தத்தை நிர்ணயிப்பதற்காக இந்த ஸூத்திரத்தையே அபேக்ஷிக் கின்றன. இந்த ஸூத்திரமில்லாமல் அவைகளுக்கு அர்த்தம் செய்ய முடியாதா என்றால் முடியும். ஆனால் நிர்ணயம் செய்ய முடியாது. நிர்ணயம் செய்ய வேண்டுமானால் பூர்வபக்ஷஸித்தாந்த யுக்திகளின் பலாபலங்களை விசாரிக்கவேண்டும். அவ்விதம் விசாரிப்பதும் उपक्रमोपसंहारादितात्पर्यलिंगங்களைக் கொண்டுதான் முடியும். அவ்விதம் விசாரணை செய்து இதுதான் இந்தச் சுருதி வாக்கியத்துக்குத் தாத்பர்யம் என்று நிர்ணயிப்பது अथातो ब्रह्मजि- ज्ञासा इत्यादिसूत्रம்தான். இதைத்தான் இந்த விருத்தியின் ஆரம்பத்தில், "आपाततः त्रय्यन्तवचोभिः प्रतिपन्नं अनुबन्धजातं न्यायेन निर्णेतुं इदं सूत्रं आरचयांचकार" என்று விளக்கிக் கூறுகிறார்.

இந்த விருத்திகாராளின் வாக்கியத்தின் கருத்தைச் சுருக்கமாகக் கூறுவோம்: परीक्ष्यलोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायात्, शान्तोदान्तउपरतः, तद्यथेऽकर्मचितो लोकः क्षीयते तरतिशोकमात्मवित्, इत्यादिश्रुति வாக்கியங்களின் ஸாமான்ய அர்த்தத்தைக் கவனித்துப் பார்த்தாலே, विषयप्रयोजनங்களும் அதிகாரி ஸம்பந்தம் முதலானவைகளும் நமக்கு நன்ருக விளங்கக்கூடும். ஆகவே अनुबन्धचतुष्टयமானது கேவல சுருதிவாக்கியங்களை விசாரிப்பதாலேயே தெரிந்துகொள்ளக்கூடியதுதான். ஆனுல் அதனுல் மாத்திரம் நிர்ணயம் ஏற்படமாட்டாது. ஏனென்ருல், நித்யாநித்யவிவேகாதி ஸாதன ஸம்பத்தியுள்ளவனுக்குத்தான், தான் அதிகாரியா இல்லையா, பிரம்மமானது ஒன்றுதாஞ, ஜீவன் பிரம்மத்தைவிட வேருனவஞ ஒன்றுபட்டவஞ, மோக்ஷமென்பது ஸ்வர்க்கம்போல் லோகாந்தரமா அல்லது ஆத்மஸ்வரூபமா? என்றெல்லாம் ஸந்தேஹங்கள் ஏற்படலாம். அவ்விதம் ஸந்தேஹம் ஏற்பட்டால் அது நிர்ணய ஞானமாகாது, ஆபாத ஞானமாகத்தான் இருக்கும். அதையெல்லாம் பற்பல யுக்திகளைக் கொண்டும் தீர்மானம் செய்யக்கூடியது ஸூத்திரம் ஒன்றுதான். ஆகவே अथातो ब्रह्मजिज्ञासा, என்ற ஸூத்திரம் ஏற்பட்டதால்தான் அதிகாரி, விஷயம், பிரயோஜனம் முதலானவைகளை நிரூபணம் செய்யக்கூடிய சுருதிவாக்கியங்களுக்கு இதுதான் தாத்பர்யம் என்ற நிர்ணயம் ஏற்படுகிறது. அவ்விதம் சுருதிவாக்யங்களின் தாத்பர்யத்தை நிர்ணயிப்பதற்காகவே இந்த அதிகரணம் ஏற்பட்டதால்தான் श्रुति களுக்கும் இந்தஸூத்ரத்துக்கும் हेतुहेतुमद्भावः என்ற ஸம்பந்தம் ஸ்பஷ்டமாகிறது. இதைத்தான் விருத்திகாராள் स्वार्थनिर्णयाय अस्य अपेक्षितत्वात् श्रुतिसंगतिः என்று நிரூபணம் செய்கிருர்கள். மிகவும் प्रामाणिकम् என்று சொல்லப்படும் पञ्चपादिकाविवरणम् என்ற கிரந்தத்திலும் இப்படியேதான் சொல்லப்பட்டிருக்கிறது, "अधिकार्यादीनां आगमिकत्वेऽपि न्यायेननिर्णयार्थमिदं सूत्रम्" என்று விவரணுசார்யாள் கூறுகிருர்கள். ஆகவே விருத்திகாராளும் விவரணகாராளும் ஒரேவிதம் சொல்வதால்

श्रुतिसूत्रங்களுக்கு हेतुहेतुमद्भावसंगतिः என்ற ஸம்பந்தம்தான் ஏற்படு கிறது என்பதில் ஸந்தேஹமில்லை. இதில் निर्णयहेतुவாயிருப்பது ब्रह्मसूत्रம்தான். எதற்கு நிர்ணயமோ அது हेतुमत् என்பார்கள். வேதாந்தவாக்கியத்துக்கே அர்த்தநிர்ணயம் கிடைக்கவேண்டி யிருப்பதால் அந்த வேதாந்த வாக்கியங்கள்தான் हेतुमत् என்று தெரிந்துகொள்ளவேண்டும். இரண்டுக்கும் உள்ள ஸம்பந்தம் தான் हेतुहेतुमद्भावः என்ற ஸம்பந்தம். இதைத்தான் आयाततः त्र्यन्तवचोभिः प्रतिपन्नं अनुबन्धजातं न्यायेननिर्णेतुं इदं सूत्रं என்று விருத்திகாராள் குறிப்பிடுகிறார்கள். இனிமேல் शास्त्रसंगतिயைப் பற்றி விவரிப்போம்.

(2) शास्त्रसंगतिः அதாவது शारीरकमीमांसाशास्त्रத்துக்கும் இந்த ஸூத்ரத்துக்கும் உள்ள ஸம்பந்தம் என்று அர்த்தம். ब्रह्मपरवाक्यतात्पर्यनिर्णायकन्यायसूचकत्वात् ब्रह्मविचारात्मकशास्त्रसंगतिः என்று விருத்திகாராள் शास्त्रसंगतिயென்றால் என்ன என்பதை விளக்குகிறார்கள். இதன் அர்த்தத்தை உதாஹரணத்துடன் காட்டுவோம். இந்த शारीरकमीमांसा என்ற கிரந்தமானது உப நிஷத் வாக்யத்தை வைத்துக்கொண்டு பிரம்மஸ்வரூபத்தைத் தான் விசாரம் செய்கிறது. விசாரம் செய்யும் வழியைக் காண்பிக் கிறது. ब्रह्मपरवाक्यं என்ற பதத்துக்கு உபநிஷத்வாக்கியங்கள் என்று அர்த்தம். ஏனென்றால் அவையெல்லாம் பிரம்மஸ்வ ரூபத்தையே நிரூபணம் செய்யக்கூடியவை. அந்த உபநிஷத் வாக்யங்களின் பதபதார்த்தங்களும் ஸாமான்ய அபிப்பிராயமும் ஒருவாறு நமக்கு வியாகரண கோசாதிகளின் உதவியால் கொஞ் சம் புரிந்தபோதிலும் அது நிர்ணய ஞானமாகாது. ஆபாதஞான மாகத்தான் இருக்கமுடியும். அதன் பூர்ணமான கருத்தை அறிய வேண்டுமானால் அவ்வித தாத்பர்யத்தை நிர்ணயிக்கக்கூடிய நியா யங்களும் யுக்திகளும் வேண்டும். அவ்வித யுக்திகளையும் நியாயங் களையும் எடுத்துக்காட்டுவதற்காகத்தான் இந்த ஸூத்ரங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

இதையே ஓர் உதாஹரணமூலம் விளக்குவோம். तत्तु समन्वयात् என்ற ஸூத்ரத்தையே எடுத்துக்கொள்வோம். அதன்

அர்த்தத்தை விருத்திகாராளின் வாக்யத்தாலேயே விவரிப்போம். तत् ब्रह्म वेदान्तेषु प्रतिपाद्यते। कुतः। समन्वयात् सम्यक् तात्पर्यवत्त्वेन वेदान्तानां ब्रह्मणि अन्वयात् संबन्धात् என்று விருத்திகாரர் விளக்குகிறார். அதாவது எல்லா உபநிஷத்துகளிலும் பிரதிபாதிக்கப்படுவது பிரம்மம்தான். ஏனென்றால் அந்த உபநிஷத்துக்களுக்கெல்லாம் தாத்பர்யத்துடன்(உட்கருத்துடன்) பிரம்மத்தினிடமே ஸம்பந்தம் இருப்பதால் என்பது விருத்திகாராளின் வாக்யத்துக்கு மேலான அர்த்தம். இதில் वेदान्ताः कर्त्रादिपरा वा ब्रह्मपरा वा என்ற ஸந்தேஹம் வரும்பொழுது மீமாம்ஸகர்கள் कर्तादिपरा एव என்று पूर्वपक्षம் செய்கிறார்கள், அந்தப்பூர்வபக்ஷத்தை तुशब्दத்தில் நிராகரணம் செய்து वेदान्ताः ब्रह्मपरा एव என்று இந்த ஸூத்ரம் தான் ஸித்தாந்தம் செய்கிறது. அதற்கு समन्वयात् என்ற ஹேதுவையும் காண்பிக்கிறது. அதற்குத் தாத்பர்யத்தைக் காண்பிக்கக் கூடிய उपक्रमोपसंहारैकरूप्यादिन्यायங்கள் இருப்பதால் என்று அர்த்தம். ஆகையால்தான் விருத்திகாராள் "तस्मात् उपक्रमादिलिंगैः वेदान्ताःब्रह्मपराएवेतिसिद्धम् என்று கடைசியில் முடிக்கிறார்கள். உபக்ரமாதிலிங்கங்கள் என்னவென்றால்—

उपक्रमोपसंहारौ अभ्यासोऽपूर्वता फलम्।
अर्थवादोपपत्ती च लिंगं तात्पर्य निर्णये ॥

என்று சொன்னபடி 6 லிங்கங்கள் (அடையாளங்கள்) இருக்க வேண்டும் என்பது கருத்து. இந்த ஆறு லிங்கங்களை வைத்துக்கொண்டுதான் தாத்பர்யத்தை நிர்ணயிக்கமுடியும். இந்த ஆறு லிங்கங்களும் பூராவாகவோ அல்லது குறைவாகவோ இருந்தால்தான் தாத்பர்யம் நிர்ணயமாகும். எல்லா உபநிஷத்துக்களிலும் அந்த லிங்கங்கள் இருக்கின்றன. அதில்ஆறு லிங்கங்களும் அடங்கிய छान्दोग्यषष्ठाध्यायத்தையே எடுத்துக் கொள்வோம். அதில் सदेवसोम्येदमग्र आसीत्, என்று सजातीय-विजातीयस्वगत भेदरहितமான பிரம்மம் உபக்ரமத்தில் இருப்பது போல் முடிவிலும் ऐतदात्म्यमिदं सर्वं, என்று அதே பிரம்மத்தை

நிரூபணம் செய்கிறது. இவ்விதம் ஆரம்பமும் முடிவும் ஒரே விதமாயிருப்பது (1) उपक्रमोपसंहारैकरूप्यम् என்ற ஒரு தாத்பர்ய லிங்கம். (2) अभ्यासः, तत्त्वमसि, तत्त्वमसि என்று ஒன்பது தடவை திருப்பித் திருப்பிச்சொல்லியிருப்பது. (3)अपूर्वता-अत्रवावकिलसत्सोम्य न निभालयसे இந்தக் கார்ய காரண ஸங்காதத்திலேயே அந்தப் பிரம்மம் இருப்பதை நீ அறிந்துகொள்ளவில்லையே ! என்று சொல்வதால் प्रत्यक्षादि प्रमाणविषयம் இல்லாதபடியால் இது விலக்ஷணமானது என்பதால் अपूर्वत्वं ஸ்பஷ்டமாகிறது. (4) ( फलम् ) यावन्नविमोक्ष्ये अथ संपत्स्ये என்ற வாக்கியத்தால் விதேஹகைவல்ய ரூபமான फलமும் சொல்லப்பட்டிருக்கிறது. अर्थवादः (5) अनेन-जीवेनात्मनानुप्रविश्य नामरूपेऽयाकरवाणि, इत्यादि अर्थवादங்களும் अद्वितीय ब्रह्मज्ञानத்துக்கு அனுகுணமாகவே இருக்கின்றன. (6) उपपत्तिः यथा सोम्यएकेनमृत्पिंडेनसर्वं मृन्मयं विज्ञातं स्यात् இது முதலான उपपत्ति களும் अद्वितीय பிரம்மஸ்வரூபத்தையே விளக்குகின்றன. कारण-व्यतिरेकेण कार्यं नास्ति என்று இந்த வாக்கியத்தால் புலனாகிறது. இந்த ஆறு லிங்கங்களும் அத்விதீய பிரம்மத்தையே ஸூசிப்பதால் இந்த छान्दोग्य श्रुति யானது பிரம்மஸ்வரூபத்தைத்தான் தாத்பர்யத்துடன் விளக்குகிறது. இந்த நியாயத்தைத்தான் समन्वयात् என்ற பதத்தினால் ஸூத்திரம் காண்பிக்கிறது. இதைத்தான் விருத்திகாரர்கள் उपक्रमादिर्लिंगैः वेदान्ता ब्रह्मपरा एवेतिसिद्धम् என்று तत्तु समन्वयात् என்ற सूत्र விருத்தியில் ஸ்பஷ்டமாக நிரூபணம் செய்து காட்டுகிறார்கள். இவ்விதம் உபநிஷத் வாக்கியங்களின் தாத்பர்யத்தை எடுத்துக்காட்டக்கூடிய நியாயங்களைக் காண்பிப்பதற்காகத்தான் ஸூத்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. என்பதை உதாஹரணத்துடன் விளக்குகிறோம். இதுதான் शास्त्रसंगतिः என்று சொல்லப்படுகிறது. இனிமேல் அத்யாய சங்கதியை விளக்குவோம்.

(3) अध्यायसंगतिः அத்யாயங்களுக்கும் ஸூத்திரங்களுக்கும் अथातो ब्रह्मजिज्ञासा, इत्यादिभिः सूत्रैः सर्ववेदान्ताः ब्रह्मपराः इति समन्वय

प्रतिपादनात् समन्वयाध्यायसंगति என்று விருத்திகாரர்கள் இதை விளக்குகிறார்கள். அதாவது முதல் ஸூத்திரம் முதல் இந்த அத்தியாயத்தில் கடைசி ஸூத்திரம் வரையிலுள்ள ஒவ்வொரு ஸூத்திரமும் ஒவ்வொரு வேதாந்த வாக்கியத்தை ஆராய்ந்து தகுந்த யுக்திகளுடன் அந்த அந்த வாக்கியங்களுக்குப் பிரம்மத்தினிடம்தான் முக்யதாத்பர்யம் என்று நிரூபணம் செய்வதால் समन्वयाध्यायसंगति: என்ற ஸம்பந்தம் ஏற்படுகிறது. உதாரணமாக जन्माद्यस्य यत: என்ற ஸூத்திரத்தில் यतोवा इमानि भूतानि जायन्ते, इत्यादि सृष्टिप्रतिपादक वाक्यங்களுக்குப் பிரம்மத்தினிடம்தான் தாத்பர்யம் என்று பல யுக்திகளுடன் வர்ணிப்பதால் ஸமன்வயாத்யாயத்தில் அதற்கு ஸம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இப்படியே அவிரோதாத்யாயத்தில் வேதாந்த வாக்கியங்களுக்கும் யுக்திகளுக்கும் விரோதமில்லையென்று நிரூபணம் செய்வதால் अविरोधाध्यायसंगति உண்டாகிறது. அப்படியே ஸாதநஅத்யாயத்தில் சிரவணமனனாதி ஸாதனங்களை நிரூபணம் செய்வதால் साधनाध्यायसंगति உண்டாகிறது. கடைசியான நாலாவது அத்யாயத்தில் மோக்ஷநிலைமையைப்பற்றி விசாரிப்பதால் फलाध्यायसंगति யும் ஏற்படுகிறது.

(4) पादसंगति: பாதங்களுக்கும் ஸூத்திரத்துக்கும் உள்ள ஸம்பந்தம் என்று அர்த்தம். இதைத்தான் விருத்திகாரர்கள் प्रथमपादे स्पष्टब्रह्मलिंगानां वाक्यानां विचार्यत्वात् पादसंगति: என்று விளக்குகிறார்கள். அதன் கருத்துப் பின்வருமாறு: இந்த முதலாவது பாதத்தில் ब्रह्मलिंग த்தை ஸ்பஷ்டமாகக் காட்டும் வேதாந்த வாக்யங்களையே அதிகமாக விசாரிப்பதால் இந்தப் பாதத்துக்கும் ஸூத்திரங்களுக்கும் ஸம்பந்தம் என்று விருத்திகாரர்கள் சொல்லுகிறார்கள். स्पष्ट என்றால் என்னவென்றால் जीवादिविषयकत्वेन संभाव्यमानस्वारस्यक लिंगानभिभूतत्वं स्पष्टत्वम् என்று அதை நிர்வசனம் செய்வார்கள். ஆரம்பத்தில் இதை வெகு सूक्ष्म மாகச் சொன்னபோதிலும் இப்பொழுது அதையே விளக்கிக் கூறுகிறோம்:

உபநிஷத்வாக்கியங்கள் பற்பல விதமானவை. சில வாக்கியங்களில் ஜீவலிங்கங்களே பலமாயிருப்பதுபோல் தோன்றும்.

சிலவைகளில் ब्रह्मलिंग ங்கள் வெகு ஸ்பஷ்டமாகத் துலங்கும். அதில் ஜீவபரமாகத் தோன்றும் வாக்கியங்களை விசாரித்துப் பிரம்மஸ்வரூபத்தில் ஸமந்வயப்படுத்துவது மிகக்கடினம். ஆகை யால்தான் அதை இரண்டாவது பாதத்தில் வைத்துக்கொண் டிருக்கிறார். இந்த முதல் பாதத்திலோ ब्रह्मलिंग ங்கள் தெளிவா யுள்ள வாக்கியங்களையே விசாரிப்பதால் அது ஸுலபம். எப்படி யென்றால் जन्माद्यस्य यत: என்ற அதிகரணத்தில் यतोवा इमानिभूतानि जायन्ते என்ற வாக்கியத்தைத்தான் விசாரிக்கிறார்கள். இந்த வாக்கியத்தால் பிரம்மத்துக்கு जगज्जन्मादिकारणत्व-ம் சொல்லப் படுகிறது. அதுவோ ஜீவாதிகளிடம் ஸம்பவிக்க முடியாது. ஏனென்றால் ஜீவாதிகள் அல்ப சக்தியுள்ளவர்கள். பிரம்மமோ ஸர்வज्ञत्वं, सर्वशक्तत्वं முதலிய வைபவங்களோடு இருப்பதால் सृष्टिस्थितिसंहारकारणत्वं ब्रह्म த்தைத் தவிர மற்றவைகளிடம் பொருந் தாது. ஆகையால் தெளிவான பிரம்மலிங்கங்களுடன் கூடிய வாக்கியங்களை இந்தப் பாதத்தில் விசாரம் செய்வதால் पादसंगति: ஏற்படுவது யுக்தம்தான். இரண்டாவது பாதத்திலோ अस्पष्ट ब्रह्मलिंगत्व வாக்கியங்களைத்தான் விசாரிக்கிறார். அதாவது सर्वत्र प्रसिद्धोपदेशात् என்ற அதிகரணத்தில் मनोमय:प्राणशरीरोभारूप: इत्यादि வாக்கியங்களைப் பார்த்தால் ஜீவபரமோ என்ற ஸந்தேஹம் உண்டாவதால் जीवलिंगाभिभूतत्वं தான் உண்டாகிறது. ஆகையால் அவைகள் अस्पष्टब्रह्मलिंगवाक्यங்கள் என்று கருதப்படுகின்றன. அந்த வாக்கியங்களையும் தகுந்த யுக்திகளால் விசாரம் செய்து அவைகளுக்கும் பிரம்மத்திடமே ஸமன்வயத்தை விருத்தி காரர்கள் நன்கு விளக்கமாகக் காட்டியிருக்கிறார்கள். இவ்விதம் ஒவ் வோர் அத்யாயத்துக்கும் பாதங்களுக்கும் உள்ள ஸம்பந்தத்தை விருத்திகாரர்கள் ஆங்காங்கே நிரூபித்திருக்கிறார்கள்.

समन्वयाध्याय த்தின் முடிவில் तस्मात्-जगत्कारणे सर्वज्ञे जिज्ञास्ये ब्रह्मणि वेदन्तानां समन्वयो नान्यथेतिसिद्धम् என்று எல்லா வேதாந்த வாக்கியங்களுக்கும் பிரம்மத்தினிடம்தான் தாத்பர்யம் என்பதை நிரூபித்து निगमनम् செய்கிறார்கள். அத்துடன்

ब्रह्मनाम्नि परेधाम्नि प्रत्यपादि समन्वयः ।
त्रय्यन्त संततेर्यस्मिन् तदस्मि ज्योतिराततम् ॥

என்று அத்தியாய முடிவில் மங்கள சுலோகம் சொல்லி வேத வாக்யங்களுக்கெல்லாம் எந்த ஸர்வோத்க்ருஷ்டமான பிரம்மஸ்வரூபத்தில் ஸமன்வயம் செய்து நிரூபிக்கப்பட்டதோ அந்த அகண்டாகாரமான வஸ்துவாகவே நான் இருக்கிறேன் என்று மங்கள சுலோக வியாஜத்தால் ஆத்மானுஸந்தானம் செய்துகொள்வதால் இந்த விருத்திகாரராளது स्वानुभवத்தை வாசகர்கள் அறிந்துகொள்ளலாம். இனிமேல் அதிகரணஸங்கதியைப்பற்றி விசாரம் செய்து விளக்குவோம்.

(5) अधिकरणसंगतिः அதாவது பூர்வாதிகரணத்துக்கும் உத்தர அதிகரணத்துக்கும் உள்ள ஸம்பந்தம் என்று அர்த்தம். अथातो ब्रह्मजिज्ञासा என்ற அதிகரணம் முதலாவதாக இருப்பதால் அதற்கு அதிகரண ஸங்கதி கிடையாது. அதைத்தான் விருத்திகாரராள் “ प्राथम्यादस्याधिकरणस्य नाधिकरणसंगतिः என்கிறார்கள். जन्माद्यस्ययतः என்ற அதிகரணத்துக்கோ जिज्ञासाधिकरण த்துடன் தொடர்பு இருப்பதால் आक्षेपिकी संगतिः என்று விருத்திகாராள் கூறுகிறார்கள். இப்படியே प्रत्युदाहरणसंगतिः प्रसंगसंगतिः स्वरूपापवादसंगतिः முதலிய ஸங்கதிகள் அந்த அந்த அதிகரண ஆரம்பத்திலேயே விருத்திகாராளால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதமே அத்யாயத்துக்கும் பாதத்துக்கும்கூட ஸங்கதிகளைக் காட்டிச் சங்கிலிக் கோவைபோல் 192 அதிகரணங்களையும் ஒன்றுக்கொன்று ஸம்பந்தப்படுத்தி இணைத்துக் கொடுத்திருக்கும் பிரம்மேந்திராளை நாம் என்றென்றும் மறக்கமுடியாது. அவ்வளவு பரம உபகாரம் செய்திருக்கிறார்கள். இந்த விருத்தி இல்லாவிட்டால் வெறும் வியாக்கியானங்களை மாத்திரம் வைத்துக்கொண்டு இந்தச் சங்கிலித்தொடர்பைக் கண்டுபிடிக்க முடியாது என்பதைப் பாஷ்யம் படிப்பவர்கள் நன்கு உணருவார்கள்.

வெறும் ஆசார்ய பாஷ்யத்தாலும் அதன் வியாக்கியானங்களாலும் விளங்காத सूत्रार्थங்களை ஆங்கங்கே விளக்கிக் காட்டியிருப்பது இந்த விருத்தியில் மற்றொரு விசேஷம். உதாஹரணமாக

आनन्दमयोऽभ्यासात् என்ற அதிகரணத்தில் உள்ள எட்டு ஸூத்திரங்களுக்கும் விருத்திகாரர்கள் பாஷ்யானுஸாரமான அர்த்தங்களை முதலில் கூறி, பிறகு நமது ஸித்தாந்தரீதியான அர்த்தத்தை வெகு அழகாகவும் தெளிவாகவும் எடுத்துக் காட்டியிருப்பது ஓர் அஸாதாரண உபகாரமாகும்.

இப்படியே ஆங்காங்கு தார்க்கிகாதிவாதங்களை நிராகரணம் செய்யக்கூடிய இடங்களில் பாஷ்யார்த்ததை நன்கு விளக்குகிறார்கள். உதாஹரணமாக. स्वपक्षदोषा च, अ २-पा. १. सू २९. என்ற ஸூத்திரத்தில் வேதாந்தமதத்தை ஆக்ஷேபிக்கும் ஸாங்க்யர்களையும் கண்டித்து அவர்களது பக்ஷத்திலுள்ள தோஷங்களையும் எடுத்துக்காட்டுகிறார்.

“सांख्यादयोऽपि निरवयवं प्रधानं जगत्परिणामी त्यंगीचक्रुः तत्रापि कृत्स्न प्रसक्त्यादिदोषः समानः । अणुवादिनोऽपि परमाणुसंयोगः व्याप्यवृत्तिर्वा अव्याप्यवृत्तिर्वा उभयथाऽपि दोषएव, ब्रह्मवादे स दोषो न समस्ति” என்று மற்ற வாதங்களைக் கண்டிப்பதுடன் நமது ஸித்தாந்தமே நிர்த்தோஷமானது என்பதைப் பல வாதத்திறமையினால் விவாதம் செய்து ஸமர்த்தனம் செய்கிறார்கள்.

கடைசியில் अनावृत्ति अधिकरण த்தில் பாஷ்யவாக்கியம் முடிவது போலவே அவ்வாக்கியங்களைத் தழுவியே தன் வாக்யங்களையும் இணைத்துக்காட்டுக்கிறார்கள். निर्गुणब्रह्मविदां तु आवृत्तिशंकैव नास्ति । यतः सगुणविदामपि निर्गुणाश्रयणे नैव अनावृत्तिः नान्यथा । तस्माद्ब्रह्मविदां निरस्तसमस्तप्रपञ्चस्वप्रकाशचिदेकरस निरतिशयानन्दात्मनाऽवस्थितिरिति अति-शोभनम्, என்று நிர்க்குணப்பிரம்மத்தை அறிந்தவர்களுக்கு மறுபடியும் ஸம்ஸாரபந்தம் கிடையாது. ஆகையால் ஆனந்த அவாப்திரூபமான மோக்ஷம் ஏற்படுவதில் தடங்கல் எதுவும் கிடையாது என்று வர்ணித்து இந்தக் கிரந்தத்தை முடிக்கிறார். மங்கள சுலோகம் பின்வருமாறு.

यज्ज्ञानाज्जीवतो मुक्तिरुत्क्रान्तिगतिरुत्तरा ।
ब्रह्मप्राप्तिः प्रत्यपादि तदस्मि ब्रह्मचिद्घनम् ॥

இதில் ஜீவன்முக்தி, உத்கிரமணம், கமனம், பிரம்மபாவத்தை அடைதல், என்ற फलाध्याय த்தின் விஷயங்களை விளக்குவதோடு

பரமமங்களமான பிரம்மானுஸந்தானத்தையும் செய்கிறார்கள். இவ்வளவு சாஸ்திரபாண்டித்யமும் பிரம்மநிஷ்டையும் இருந்தும் கூட முடிவில்—

जडः क्वाहं बालः क्वचगहनवेदान्तसरणिः
तथाप्याम्नायार्थं परमशिवयोगीन्द्रकृपया ।
विजानन् व्याख्यानं व्यरचयमहं वेदशिरसः
तदेतत् क्षन्तव्यं मयि सदयदृष्ट्या बुधजनैः ॥

என்ற கடைசி சுலோகத்தில் தாம் ஒன்றும் தெரியாத குழந்தைபோலவும் தாம் இந்த விருத்தியை எழுத அர்ஹதையில்லாதவர்போலவும் பாவித்து எழுதியிருப்பது மயிர்க்கூச்சலை யேற்படுத்துகிறது. தாம் எழுதியிருப்பது தம் சக்தியினால் அல்ல வென்றும் குருநாதாளுடைய அனுக்ரஹத்தால்தான் இவ்விதம் எழுதியிருப்பதாகவும் வித்வான்கள் இதை மன்னிக்கும்படியாகவும் கேட்டுக்கொண் டிருப்பதைப் பார்த்தால் நமது கண்களில் கண்ணீர்ப்பிரவாஹமே ஏற்படுகிறது. இவ்வித ஆனந்த பாஷ்ப மங்களத்துடன் இக்கட்டுரையை முடித்துக் கொள்வோம்.

श्रीशंकरं भाष्यकारं वृत्तिकारं सदाशिवम् ।
भूयोभूयोऽभिनन्दामः प्रणमामः पदेपदे ॥ १ ॥
क्वेयंवृत्तिः परमगहना ब्रह्मविन्मात्रगम्या
क्वाहं बालो जडिम भरितः शास्त्रगंधानभिज्ञः ।
वृत्तेरस्याः विवरणमिदं यन्मयाऽकारि किंचित्
स्फीता काचिद्गुरुवरकृपा केवलं तत्र हेतुः ॥ ३ ॥
मंगलं भाष्यकाराय वृत्ति-काराय मंगलम् ।
तदीयशिष्यशिष्याणामस्माकं चास्तु मंगलम् ॥ ४ ॥
सच्चिदानन्दतीर्थेन भाष्यस्वास्याभिधाजुषा ।
वृत्तेरस्यास्तुमाहात्म्यलेशलेशोऽयमुद्धृतः ॥ २ ॥

---